# 1950-51 க்கு முன் வெளியேற்றப்பட்ட விவசாயிகளுக்கு அவசரச்சட்டத்தினுல் பலனில்லை

## குடியிருப்பு மனைக்கட்டு விவசாயிக்கு சொந்தமாக வேண்டும்

### சட்டசபையில் வெங்கடேசன் பிரசங்கம்

சென்னை, நவ. 26—

தஞ்சை ஜில்லா வாரம், குத்தகை பண்ணையாள் மசோதா சென்னை சட்டசபை முன் விவாதத்திற்கு வந்தபொழுது தோழர் வெங்கடேசன் செய்த பிரசங்க விபரம் கீழே தரப்பட்டுள்ளது:



1943-ம் வருஷத்திலிருந்து வாரம் குத்தகைக்காரர்கள் தங்களுடைய நியாயமான கோரிக்கைகளுக்காக தஞ்சை ஜில்லா விவசாயிகள் பெரிய போராட்டத்தை நடத்தி வந்திருக்கிறார்கள். அந்தப் போராட்டத்தின் காரணமாக சாதாரணமான என்னைப் போன்ற ஒரு உழவனுக்கு இந்த சபையில் இந்த சட்டத்தைப்பற்றி விவாதிப்பதற்கு ஒரு சந்தர்ப்பம் ஏற்பட்டிருக்கிறது.

**பல குறைபாடுகள்**

இந்த சட்டத்தின்படி அந்த விவசாயிகளுடைய நியாயமான கோரிக்கைகள் எல்லாம் கொடுக்கப் பட்டிருக்கிறதா என்று பார்த்தால் பல குறைபாடுகள் இதில் உள்ளன என்றே தான் கூறவேண்டியிருக்கிறது.. ஏனென்றால் இந்த மசோதாவில் சாதாரண விவசாயிகளின் குறைகள் தீர்க்கப்படவில்லை. சென்றகாலத்தைப் போனறு மீண்டும் தட்டிக் கழித்துக் கொண்டிருக்கமுடியாது என்ற நிலையில்தான் இன்றைய தினம் நில சீர்திருத்தம் என்கின்ற பெயரளவில் இந்தச் சட்டம் வந்திருக்கிறது, இன்று அழிந்து போய்க்கொண்டிருக்கின்ற நிலையை இன்னும் நீடிக்கக்கூடிய முறையில் இந்த நிலச் சீர்திருத்தம் இருக்கிறது.

விவசாயி வாழ்வதற்கு வேண்டிய வழிவகை செய்யக்கூடிய நிலையில் இல்லை என்று தான் சொல்ல வேண்டியதாக இருக்கிறது. மக்களுடைய எழுச்சியைத் தடுப்பதற்கும் அவர்களுக்கு சௌகர்யம் செய்து விட்டோம் என்று கூறுவும் இந்தச்சட்டம் சாதகமாக இருக்கிறது. ஆனல் ஒன்று சொல்லமுடியும். இந்த சட்டமானது நில சீர்திருத்தம் என்கின்ற முறையில் முதல்படியாக இருக்கிறது. [illegible] மட்டும் குறிப்பிட [illegible]. இச்சட்டப்படி 40 சதவிகிதம் கொடுக்க வேண்டும் என்று இருக்கிறது. ஆனல் [illegible] 33, 25 சத விகிதம் விவசாயிகள் பெற்றுக் கொண்டு வந்திருக்கிறார்கள். இப்படி அவர்கள் பெற்று வரும்போது அவர்களுக்கு இன்னும் களவடி, வாரம், [illegible] என்றும் பல வருமானம் கிடைத்துவந்தது. இப்பொழுது அவைகளெல்லாம் [illegible] மொத்தமாக 40 சத விகிதம் என்று குறிப்பிட்டிருப்பது அவர்களுக்கு ஏற்கனவே கிடைத்து வந்ததை விட அதிகமாகக் கிடைக்க வழியில்லை.

யவர்களுடைய நிலங்கள் 1946ம் வருஷத்திலிருந்து பறிக்கப்பட்டு வந்திருக்கிறது. அவர்களுக்கு இந்த சட்டத்தின்மூலம் ஏதாகிலும் கிடைக்கிறதா என்றால் ஒன்றுமில்லை இந்தப் போராட்டம் சுமார் 6, 7 வருஷங்களாக நடத்தப் பட்டுவருகிறது என்பது ஒப்புக்கொள்ளப்படுகிறது. இந்த சட்டத்தின்மூலம் அவர்களுக்கு ஒன்றும் இல்லையென்றால் அவர்களுடைய கஷ்டம் இன்னும் அதிகரிக்கும். தஞ்சை ஜில்லா சிறுகளத்தூர், களப்பாள் முதலிய இடங்களில் விவசாயிகள் இப்பொழுது நசுக்கப்பட்டு வருகிறார்கள். அவர்கள் தங்களுடைய போராட்டத்தை 1948ம் வருடம் முதற் கொண்டு நடத்திவருகிறார்கள். ஏற்கனவே இருக்கும் விவசாயிகளை வெளியேற்றி அவர்களைப் பண்ணையாட்களாகவும் வைத்துக்கொள்ளாமல் நிலத்திலிருந்து துரத்திவிட்டார்கள். அவ்விதம் துரத்திவிட்டு இராமநாதபுரம் ஜில்லாவிலிருந்து வந்தவர்களுக்கு வேலைகொடுத்து அவர்களைக் கஷ்டப்படுத்திக் கொண்டுவருகிறார்கள். அவர்களுக்குக் குறைவான கூலியைக் கொடுத்து அவர்களிடம் வேலைவாங்கி வருகிறார்கள். இன்னும் அவர்களுக்கும் ஏற்கனவேயுள்ள விவசாயிகளுக்கும் சண்டை மூட்டிவிட்டுக்கொண்டு இன்றைய தினம் அங்கே நிலப்பிரபுக்கள் திருவிளையாடல் நடத்திக் கொண்டு வருகிறார்கள்.

**சட்டத்தை மீற மிராசுதார்கள் சூழ்ச்சி**

1946லிருந்து ஏழைகளுக்கு நிலம் கொடுக்கப்படவில்லை. அதனுல் ஏழைகள் மிகவும் கஷ்டப்படுகிறார்கள். அங்கேயுள்ள முறை மிராசுதார்களுக்கே சாதகமாக இருக்கிறது. ஆகவே அந்த முறையை மாற்றியமைப்பதற்கு இச்சட்டத்திலே இடமளிக்க வேண்டும். குறிப்பாக இச்சட்டத்தை ஆதரித்துப் பேசுகின்ற குன்னியூர் சாம்பசிவ ஐயர் போன்றவர்களும் கூட இன்றைய தினம் சாகுபடியாளர், பண்ணையாளர்கள் பலர் கடன் கொடுக்க வேண்டுமென்று சொல்லி பழைய பாக்கிகளுக்காக அவர்களை வெளியேற்றி வருகிறார்கள் தஞ்சை ஜில்லா மிராசுதார்கள் அவர்கள் இச்சட்டத்திலுள்ள விதிகளை எல்லாம் எப்படி எப்படி மீறவேண்டுமோ அப்படி அப்படி மீறுவதற்காக வேண்டிய பலசூழ்ச்சிகளை செய்து கொண்டிருக்கிறார்கள்—செய்யப்போகிறார்கள் என்று காங்கிரஸ் கட்சி அங்கத்தினர் திரு நாராயணசாமி நாயுடு அவர்களே வெகு அழகாக சென்ற கூட்டத்தில் எடுத்துச் சொல்லியிருக்கிறார். இந்தச் சட்டத்தை மீறுவதற்கு வழியில்லாமல் செய்ய வேண்டும். அதற்காகத்தான் கடன் நிவாரணம் விவசாயிகளுக்கு அளிக்க வேண்டும். அவர்கள் இப்பொழுதுவசித்துக்கொண்டிருக்கின்ற மனைகளையே அவர்களுக்குச் சொந்தமாக்கவேண்டும். சுதந்திர நாட்டிலே ஒரு தொழிலாளிக்கு குடியிருக்க மனை சொந்தமில்லையென்ற இழிவு இருக்கக் கூடாது, இன்றைய தினம் என்றைக்கு மிராசுதார்கள் வெளியே போனாலும் விவசாயிகள் வெளியேற வேண்டியிருக்கிறது. அதோடு விவசாயிகள் தோட்டத்திலே வைக்கும் மரங்களையும் மிராசுதார்கள் வெட்டிக் கொண்டு போய்விடுகிறார்கள். இம்மாதிரியெல்லாம் ஏற்படாமல் குடியிருப்பு மனைகளை விவசாயிகளுக்குச் சொந்தமாக்க வேண்டும்.

சரியாக நடந்து கொள்ளாத விவசாயிகளை நிலத்திலிருந்து வெளியேற்றக் கூடிய அதிகாரம் ரெவின்யூ கோர்ட்டிற்குக் கொடுக்கப் பட்டிருக்கிறது. இன்றுள்ள அதிகாரிகளில், பலரும், தாசில்தார்களில் பலரும் தஞ்சை ஜில்லா மிராசுதார்களின் பிள்ளைகள் தான், அவர்கள் தங்கள் இனத்தவர்களுக்கு மிராசுதார்களுக்கும் உதவுவார்களே தவிர சாகுபடியாளர் பண்ணையாட்களுக்கு உதவி செய்யமாட்டார்கள். ஆகையால் சரியான காரணம் இருந்தாலன்றி அவர்களை நிலத்திலிருந்து வெளியேற்றக் கூடாதென்று உத்தரவு போட வேண்டும். பெரும்பாலான மக்களுடைய ஜீவாதாரப் பிரச்னை ஆதலால் இதில் பல திருத்தங்களைச் செய்து விவசாய மக்களுக்கு உண்மையிலேயே பயன்படத்தக்கதோர் சட்டமாக செய்ய வேண்டுமென்று கேட்டுக் கொண்டு என் பேச்சை முடித்துக் கொள்ளுகிறேன்.

**பாகுபாடு ஏன்?**

இன்னும் ஒரு வேலிக்குக் குறைவாக உள்ள மிராசுதார்களுக்கு இந்த மசோதா கட்டுப்படுத்தாது என்றிருக்கிறது. இன்றைய தினம் மத்திய சர்க்கார் சிப்பந்திகளுக்கும் மாகாண சர்க்கார் சிப்பந்திகளுக்கும் வித்தியாசமான சம்பளம் ஏற்பட்டிருப்பது போல இதிலும் வித்தியாசம் ஏற்பட்டிருக்கிறது. அதே போல ஒரு இடத்தில் வேலை செய்கிறவர்களுக்கு இரண்டு விதமான கூலிகொடுப்பது என்று இருக்கிறது. இம்மாதிரி இருந்தால் விவசாயிகளிடம் குழப்பம், ஏற்பட சந்தர்ப்பம் ஏற்படும். அதனால் ஒரு வேலி மிராசுதார்கள் வேண்டும்போது நேரடியாக சாகுபடி செய்யலாம். அவ்விதம் இல்லாத ஒரு வேலிக்குட்பட்ட மிராசுதார்களையும் இந்த சட்டம் கட்டுப்படுத்தும் என்பதாக இருக்கவேண்டும்.

இன்னும் ஒரு வேலி உள்ள நிலச்சொந்தக்காரர்கள் சர்க்கார் காரியாலயங்களிலும், இன்னும் பல வேலைகளிலும், வியாபாரத் தொழிலிலும் அலுவல் பார்த்து வருகின்றனர். அவர்கள் இந்த சட்டத்தினால் பாதிக்கப்படாமல் அவர்கள் தங்களுடைய விவசாயிகளிடமிருந்து அதிக வரி வாங்கிவரலாம். அம்மாதிரி அவர்கள் அதிக வரி வாங்கி வந்தால் விவசாயிகள் கஷ்டப்படும் நிலைமை ஏற்படும். ஏற்கனவே அவர்கள் இப்பொழுது கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கிறார்கள். இப்பொழுது 5,10,100 வேலி நிலம் வைத்துக் கொண்டு அவைகளை சாகுபடி செய்து சம்பாதித்து வருகிறவர்கள் இந்த சட்டத்தின் மூலம் சௌகரியம் அடைவார்கள்.

சிறிய விவசாயிக்கு இதன் மூலம் நன்மை இல்லை. நியாயமான குத்தகை வேண்டும். குடிவாரம் வேண்டும் என்று நியாயமாகக் கேட்கக் கூட[illegible]

# டயோசீஸன் பிரஸ் தொழிலாளர் பொதுக்கூட்டம்

சென்னை, நவ. 28—

நேற்று மாலை 6 மணிக்கு வேப்பேரி திருமலைப்பிள்ளை பார்க்கில் டயோசீசன பிரஸ் தொழிலாளர்களின் கோரிக்கைகள் விஷயமாய் ஒரு பொதுக் கூட்டம் நடைபெற்றது.

மைசிண்டியா டைல் தொழிலாளர் கம்பனி கேட்டிலிருந்து ஊர்வலமாக புறப்பட்டு பூந்தமல்லி ஹைரோட் வழியாக வேப்பேரி ரோட் மூலம் சென்று கூட்டத்தில் கலந்து கொண்டனர். கூட்டத்திற்கு தோழர் நாகேஜி ராவ் தலைமை வகித்தார். தோழர்கள் எஸ். தீனதயாளு, கே. முருகேசன் எ. கோவிந்தசாமி முதலியவர்கள் அடிப்படைச் சம்பளம், போனஸ், கிராசுடி, லீவ் வசதிகள் காண டவுனில் நடைபெறும் ஊழல்கள் முதலாளிகளின் அக்கிரமங்கள் முதலியவைப் பற்றி விரிவாக பேசினர். தொழிலாளர் ஒற்றுமை சங்கத்தின் சாதனைகளைப் பற்றியும் பேசினர்.

பிறகு கீழ்க்கண்ட தீர்மானங்கள் ஏகமனதாக நிறைவேறின.

1. ஸ்ரீவில்லிபுத்தூரிலிருந்து வந்திருக்கும் நெசவாளர் பட்டினி ஜதா சென்னைக்கு வந்திருப்பதை வரவேற்று அவர்களின் நியாயமான கோரிக்கைகளுக்கு ஆதரவளிப்பதோடு ராஜகோபாலாச்சாரியை அவர்களின் கோரிக்கைகளை ஏற்றுக்கொள்ளுமாறு வற்புறுத்தி கேட்டுக்கொள்ளப் பட்டது.

2. உலகத்தொழிற்சங்க சம்மேளனத்தின் மூலம் பல் சிகிச்சை செய்வதற்கான யந்திரத்தை அனுப்பி தொழிலாளர்க்கு உதவியதை வரவேற்றும் சென்னை துறைமுகத்திற்கு வந்துள்ள அதன் மீது சர்க்கார் எவ்வித சுங்கமும் விதிக்கக்கூடாது என தீர்மானிக்கப்பட்டது.

3. ஹைதராபாத் சுரங்கத் தொழிலாளர் தங்கள் நியாயமான கோரிக்கைகளுக்காக துவங்கியுள்ள போராட்டத்திற்கு ஆதரவு காட்டியும் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

# சென்டிரல் ஸ்டேஷனில் ரெயில்வண்டி விபத்து

சென்னை, நவ. 28,

இன்று காலை 4.30 மணிக்கு யானை கவுனி 'டாப் பாயிண்ட்' அருகில், ரெயில் வண்டியை திருப்பி, மெயின்லையனுக்கு கொண்டுவர 'ஷண்டிங்' நடந்து கொண்டிருக்கும் பொழுது, 34–35 பாயிண்ட்டுக்கருகில் இரண்டு வண்டிகள் லையனை விட்டு இறங்கி, பக்கத்திலுள்ள ஒற்றவாடை தெருவில் உள்ள சுவரை இடித்துக்கொண்டு பாரிஸ் ஸ்டேஷனில் நுழைந்தது.

இதன் காரணமாக அருகில் இருந்த ஒரு பாயிண்ட்ஸ்மன் அடிபட்டு, குடல் வெளி வந்து சாகும் தருவாயில் இருக்கிறார்.

இதே இடத்தில் சமீபத்தில் பல விபத்துகள் ஏற்பட்டிருப்பதாக சொல்லப்படுகிறது 8 பாயிண்டுகளுக்கு ஒரே பாயிண்டுஸ்மென் வைத்து வேலை வாங்குவதால் இப்படிப்பட்ட விபத்து அடிக்கடி ஏற்படுகிறது.

அடிபட்டவர் பெரம்பூரிலிருந்து வரும் ரயில்வே தொழிலாளி கே. கோவிந்தராஜுலு என சொல்லப்படுகிறது. (ந-ந)

# இரண்டாண்டுகளில் நவசீனுவில் அறியாமை ஒழியும்

## ஆரம்ப ஆசிரியருக்கு ரூ. 110 சம்பளம்

## கல்லூரி ஆசிரியருக்கும் பிரதம மந்திரிக்கும் ஒரே சம்பளம்

### பேராசிரியர் முண்டசேரியின் பிரசங்கம்

கோவை, நவ. 27—

நவ சீனுவில் புதிய அடிப்படைகளில் கல்வி போதிக்கப்படுவதாகவும் எழுத்தறிவிப்பு இயக்கமொன்று நடத்தப்படுவதாகவும் அதன் விளைவாக இரண்டாண்டு காலத்தில் அறியாமை அங்கே அறவே ஒழிக்கப்பட்டு விடுமென்றும் ஐந்தாண்டு காலத்தில் நாட்டிற்கு வேண்டிய டாக்டர்களும் என்ஜினீயர்களும் தயாராகி விடுவார்கள் என்றும் திருச்சூர், தாமஸ் கல்லூரி பேராசிரியரான ஜோசப் முண்டசேரி இங்கு நடைபெற்ற கூட்டமொன்றில் பேசுகையில் கூறினார்.

கோவை சமாதானப் பிரியர்களால் இக்கூட்டம் கூட்டப்பட்டது. இதில் சில பள்ளி ஆசிரியர்களும் பல மாணவர்களும் படித்த நடுத்தர வகுப்பினரும் கலந்து கொண்டனர்.

சமீபத்தில் பீகிங்கில் நடந்த ஆசிய சமாதான மகாநாட்டில் ஜோசப் முண்டசேரி கலந்து கொண்டார்.

சீனுவில் தாம் நேரில் கண்டு அறிந்து வந்தவை பற்றிப் பேசுகையில் அவர் கீழ்வருமாறு கூறினர்.—

**கல்வியின் முன்னே**

சீனுவில் கல்வித்துறையில் பெரிய முன்னேற்றம் ஏற்பட்டிருக்கிறது. அடுத்த இரண்டாண்டு காலத்தில் அறியாமையை அறவே ஒழித்துவிட முடியுமென்று அவர்கள் கூறுகின்றனர். இதற்காக குறுகிய கால எழுத்தறிவிப்பு இயக்கமொன்றை சீனு நடத்திவருகிறது. சீன பாஷை அலாதியான ஒவ்வொரு வார்த்தைக்கும் ஒவ்வொரு வரிவடிவம் அப்பாஷையிலுண்டு. மொத்தம் 20 ஆயிரம் வார்த்தைகள் அம்மொழியில் இருக்கின்றன. சர்வதேசப் புகழ் வாய்ந்த பெரிய ஆசிரியர்களும்கூட சுமார் 2000 வார்த்தைகள் வரைதான் கற்றுள்ளனர். ஆறு மாத காலத்தில் 300 வார்த்தைகளை எழுத்தறிவற்றவர் களுக்குப் போதித்து ஓரளவு மொழி திறமையை ஏற்படுத்துவதே குறுகிய கால எழுத்தறிவிப்பு இயக்கத்தின் குறிக்கோள்.

இதைக் கற்றுத்தர விசேஷ வசதிகளுடன் பள்ளிக்கூடங்கள் சீன மக்களுக்குத் தேவைபடவில்லை, மக்கள் எங்கு இருக்கிறார்களோ அங்கேயே அவர்களுக்குப் பள்ளியும் ஏற்பட்டு விடுகிறது. ஓரளவு எழுத்துப் பயிற்சி யுள்ளவர்களே மற்றவர்களுக்குப்பாடம் சொல்லித் தருகிறார்கள்.

இதன் விளைவாக புதியதாக நூல்களைப் படிக்க வேண்டும் என்ற பேராவல் சீன மக்களிடையே ஏற்பட்டிருக்கிறது. ஷூர்மார்க்கெட் அவ்வளவு பெரிய புத்தகாலயமொன்றில் மாலை நேரத்தில் ஏராளமானபேர் புதிய புத்தகங்களைத் தேடி குவிப்பதை நான் பார்த்தேன்.

இதற்கு காரணம் எழுத்தறிவியக்கமும், அத்துடன் சீன மக்களின் பொருளாதார நிலையில் தேவைப் பொருள்களுக்குச் செலவிட்டது போக ஓரளவு டாம்பீக பொருள்களுக்கும் செலவிட மீதப்படுவது ஆகும். அங்கே கதை புத்தகங்கள் சாதாரண மக்களின் வாழ்க்கையைப் பிரதிபலிப்பனவாக இருக்கின்றன.

**குழந்தைகளுக்குப் பள்ளிகள்**

3, 4 வயதுள்ள குழந்தைகளுக்கு தனி பள்ளிகள் அங்கு இருக்கின்றன. ஒவ்வொரு தொழிற்சாலையும் கட்டாயமாக ஒரு பள்ளியை தொழிலாளிகளின் குழந்தைகளின் உபயோகத்திற்காக நடத்த வேண்டும்.

ஆரம்ப கல்வி, செகண்டரி கல்வி, கல்லூரி கல்வி ஆகியவற்றிற்காக பள்ளிகள் நடத்த அரசாங்கத்தின் பொறுப்பாக இருக்கிறது. கல்வி இலவசமாகவே அளிக்கப்படுகிறது.

செகண்டரி கல்வியளிக்கும் பள்ளிகள் சுமார் 2000 பேர் படிக்க வசதியுள்ளனவாக இருக்கின்றன. அங்கேயே தங்கி படிப்பதற்கு அரசாங்கம் உற்சாகமளிக்கிறது. செகண்டரி பள்ளிகளில் என்ஜினீயரிங் படிப்பிற்கான ஆரம்ப பாடங்கள் கற்றுத் தரப்படுகின்றன.

என்ஜினீயரிங் வைத்திய படிப்புகளை ஆர்வத்துடன் ஆண் பெண் இரு பாலரும் கற்கின்றனர், ஐந்து வருஷ காலத்திற்குள் சீன கிராமம் ஒவ்வொன்றுக்கும் ஒரு டாக்டரையும் சீனுவின் நிர்மாண வேலைகளுக்குத் தேவையான என்ஜினீயர்கள் அனைவரையும் சீனுவிலேயே தயாரித்து விடுவது அரசாங்கத்தின் குறிக்கோள்.

**இலவச உணவு**

கல்விபெறும் மாணவர்களுக்குத் தேவையான உணவு இருப்பிட வசதிகள் யாவும் இலவசமாகவே தரப்படுகின்றன. ஓரளவுக்குமேல் அதிகமாக ஊதியம் பெறுபவர்களுடைய குழந்தைகளிடமிருந்து மட்டும் சிறிதளவு (சுமார் 12 ரூபாய்கள்) மாத கட்டணம் பெறப்படுகிறது. இப்படி பணம் கட்டுபவர்கள் மொத்தமாகக் கல்வி பெறுபவர்களின் எண்ணிக்கையில் சுமார் 20 சதவிகிதமேயிருக்கும்.

புதிய கல்வி திட்டமே தேசபக்தி, நாட்டுமக்கள்மீது அன்பு தொழிலின் கவுரவம், விஞ்ஞானத்தின் மேன்மை, பொது சொத்துக்களைப் பாதுகாப்பது என்ற ஐந்து அடிப்படைகளின் மீது நிறுவப்பட்டுள்ளது.

ஒரு புதிய மனப்பான்மையே சீனத்தில் வளர்கிறது. சீனுவில் ஆண்பெண் இரு பாலாரும் ஒன்றாகச் சேர்ந்தே கல்வி கற்கின்றனர். ஆனல் இருபாலாரும் ஆக்கபூர்வமாக தேசத்திற்கு சேவை செய்வது என்ற புதிய மனப்போக்குடன் கல்வி பெறுவதால் அங்கே தவறான ஒழுக்க உணர்வுக்கு இடமேற்படவில்லை.

**தாய்மொழியில் கல்வி போதனை**

பள்ளிகளில் பரீட்சைகள் இல்லை. அவ்வப்போது ஆசிரியர்கள் மாணவர்களின் திறமையைமதிப்பிட்டு கணிக்கின்றனர். எல்லா பாடங்களும் தாய்மொழியிலேயே போதிக்கப்படுகின்றன. சமஸ்கிருதம் உட்பட முக்கிய பல அன்னிய மொழி போதனைகளும் பல்கலைக் கழகத்தில் போதிக்கப்படுகின்றன.

ஆரம்பப்பள்ளி ஆசிரியர்களுக்கு சுமார் 110 ரூபாய் ஊதியம் கிடைக்கிறது. இது அத்தியாவசியத் தேவைகளை பூர்த்தி செய்துகொள்ளத் தேவையான அளவுக்கும் சிறிது அதிகம். செகண்டரி பள்ளிகளின் ஆசிரியர்கள் சுமார் 200 ரூபாய்க்கு மேல் பெறுகிறார்கள். கல்லூரி ஆசிரியர்கள் 400 ரூபாய் மாதம் பெறுகிறார்கள். சீனப்பிரதம மந்திரிக்கும் அதே சம்பளம்தான் தரப்படுகிறது. சீனக்குடியரசு தலைவர் மாதம் 600 ரூபாய் பெறுகிறார். பல்கலைக் கழகத் தலைவர்களுக்கு அந்த சம்பளம் தரப்படுகிறது.

தொழில் வர்த்தகம் பற்றி பேசுகையில் சீனுவிலும் விற்பனைவரியும், வருமான வரியும் இருக்கிறதென்றும், விற்பனை வரியிலிருந்து உணவுமுதலிய அத்தியாவசியப் பொருட்களுக்கு விலக்கு இருக்கிறதென்றும் முண்டசேரி கூறினர்.

மேலும் அவர் கூறியதாவது: சீனுவின் தொழிலில் சுமார் 70 சதவிகிதம் தனிப்பட்டவர்களால் நடத்தப்படுகிறது. ஆனல் அவர்களுடைய லாபம்வரையறுக்கப்பட்டிருக்கிறது. அதிகமாக சேரும்பணத்தைஅவர்கள் தங்கமாகவோ விவசாய நிலமாகவோ வாங்கி சேகரிக்க முடியாது, வட்டிக்கு பாங்குகளில் சேகரித்துவைக்கலாம். ஒரு குறிப்பிட்ட அளவு தொகை சேர்ந்த பிறகு அரசாங்க உதவியுடன் அதைவேறு தொழில்களில் ஈடுபடுத்தலாம்.

**"கூட்டுறவு இயக்கம்"**

தேசிய வாழ்வில் கூட்டுறவு இயக்கம் முக்கிய பங்கு வகிக்கிறது. பெரும்பாலான கிராமங்களில் கூட்டுறவு சங்கங்கள் இருக்கின்றன. அவைகளை கிராமக் கமிட்டிகளே நிர்வகிக்கின்றன. கூட்டுறவு சங்கங்கள் மூலமாக உற்பத்தி பொருள்களின் விற்பனையும் தேவைப் பொருள் வாங்குவதும் நடக்கின்றன.

**பத்திரிகைகள்**

பத்திரிகைகள் சுயேச்சையாக இயங்குகின்றன. அரசாங்கத் திட்டங்கள் அமுல் நடத்தப்படுவதை ஆக்கபூர்வமாக அவைகள் கண்டித்து எழுதுகின்றன. பத்திரிகைகளில் அரசாங்க திட்டத்தைப் பற்றிவிமர்சனம், கூலி மக்கள் எழுதும் கடிதங்கள், கையெழுத்துகளுடன் பக்கம் பக்கமாக பிரசுரிக்கப்படுகின்றன.

ஒவ்வொரு புதிய திட்டமும் அரசாங்கத்தால் முடிவு செய்யப்படுவதற்கு முன் பொது மக்களின் அபிப்பிராயத்திற்காக பிரசுரிக்கப்படுகின்றன. தீர்க்கமான விவாதத்திற்குப் பிறகு ஏற்றுக் கொள்ளப்பட்ட திட்டங்களை கண்டிப்பதற்கு மட்டும் பத்திரிகைகள் அனுமதிக்கப்படுவதில்லை.

பத்திரிகைகளில் [illegible] படும் குறைகளும், கண்டனங்களும் அரசாங்கத்தால் அவ்வப்போது கவனித்து குறைகள் நீக்கப்படுகின்றன.

**அரசியல்**

சீனுவில் எல்லா அரசியல் ஸ்தாபனங்களையும், மக்களுடன் தொடர்பு கொண்டு விடுதலை இயக்கத்தில் பங்கு கொண்ட ஸ்தாபனங்களையும் கொண்ட கூட்டணி அரசாங்கம் அங்கே நடக்கிறது, கட்சிகளுக்குள் பூசல்கள் நிலவுவதில்லை. ஒவ்வொரு கட்சியும், ஒவ்வொரு குறிப்பிட்ட தேசிய நிர்மாண இயக்கத்தைப் பொறுப்பேற்று நடத்துகின்றன. படிப்படியாக கிராமத்திலிருந்து மத்தியசபை வரையிலும் அரசாங்கம் தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகளைக் கொண்டு நடத்தப்படுகிறது.

மாலையில் சிதம்பரம் பூங்காவில் நடைபெற்ற பொதுக் கூட்டத்திலும் முண்டசேரி பேசினர். கூட்டத்திற்கு எம். கிருஷ்ணன் தலைமை வகித்தார்.

சீனுவில் நியாயமான மத சுதந்தரம் நிலவுகிறது என்று அவர் பேசினார். கிருஸ்தவ மதத்தினர் கொடுமை படுத்தப் படுகின்றனர் என்ற வதந்தி உண்மையற்றது என்று அவர் சொன்னார்.

அவர் மேலும் கூறியதாவது: சீனுவில் பவுத்தர்களோ முஸ்லீம்களோ ஒடுக்கப்படுவதாகக் கூக்குரல் எழுப்பப்படுவதில்லை, உண்மை என்ன என்றால், கிருஸ்தவ மதத்தைச் சேர்ந்த வெளிநாட்டினர் சிலர் சீனுவின் நலனுக்கு விரோதமாக நடக்கும்போது அவர்கள் தண்டிக்கப்படுகின்றனர் என்பதே. நான் ஒரு ரோமன் கத்தோலிக்க கிறிஸ்துவர். சீனுவில் கத்தோலிக்க மதத்திற்கு உரிமைகளிருப்பதை நான் நேரிலேயே கண்டேன்.

# தோட்டத் தொழிலாளர் சங்க ஆரம்பவிழா

## காங்கிரஸ் சங்கத் தலைமை தொழிலாளிகளை முதலாளிக்கு அடமானம் வைக்கிறது

கூனூர், நவ. 24—

23-11-52ல் கொலக்கொம்பை, குன்னூர் ஆகிய இரு இடங்களிலும் செங்கொடியின் கீழ் தோட்டக்காடு தொழிலாளர் சங்கத்தின் ஆரம்ப கூட்டங்கள் நடைபெற்றன. கொலக்கொம்பை கூட்டத்திற்கு குன்னூர் நகரமக்கள் கூட்டணி காரியதரிசியும், முனிசிபல் கவுன்ஸிலருமான தோழர் ராஜன் தலைமை வகித்தார். குன்னூர் கூட்டத்திற்கு மேட்டுப்பாளையம் தோழர் வெள்ளியங்கிரி தலைமை வகித்தார்.

இந்தியாவிற்கு சுதந்திரம் கிடைத்து விட்டதாக கூறப்படுகிற நாளிலிருந்து நீலகிரி மலையிலுள்ள தோட்டத் தொழிலாளிக்கு காங்கிரஸ், சங்கம் அமைத்திருந்தும், காங்கிரஸ் ஆட்சியிலிருந்து தொழிலாளிகளுடைய நிலை எவ்விதத்திலும் உயரவில்லை. திரு-கொச்சியில் ரூ.1-11-0, 1-9-6, 1-3-6 (பாக்டரி ஆண், பெண்) தொழிலாளிகளுக்கு சம்பளம் கொடுக்கப்படுகிறது. சர்க்கார் லேபர் கமிஷனர் 1-7-0 சிபாரிசு செய்தார். ஆனைமலையில் ரூ.1-5-9 கொடுக்கப்படுகிறது. இவ்வளவிருந்தும் சர்க்கார் குறைந்தபக்ஷ சம்பள சட்டப்படி ரூ.1-5-0 என்று நிர்ணயம் செய்துள்ளது. வங்காளத்தில் பெண் தொழிலாளிகளுக்கு 12 வாரங்களுக்கு ரூ. 5-4-0 விதம் பிரசவ சகாயம் கொடுக்கப்படுகிறது. தென்னிந்தியாவில் 8 வாரங்களுக்குத்தான் கொடுக்கப்படுகிறது.

தோட்டத் தொழிலாளிகளுக்கென்று எவ்விதசட்டமும் இதுவரை இல்லை, சமவெளிப் பிரதேசத்தில் குறிப்பாக கோயமுத்தூர் ஜில்லாவில் அம்பிச்சாயர் மடம் பழைய கோட்டை சங்கராண்டாம் பாளையம் போன்ற பெரும் நிலச்சுவான்களால் அடிமைப் படுத்தப்பட்டிருந்த விவசாயக் கூலிகள் மலைகளுக்கு வந்து வெள்ளை, கருப்பு நிற இமிங்கலங்களுக்கு அடிமையாக்கப் பட்டிருக்கிறார்கள். இதுவரை இருந்து வந்த காங்கிரஸ் தொழிற்சங்கம் தொழிலாளிகளை விழிப்படைய செய்யவில்லை. அவர்கள் அடிப்படையானகுறைகளை போக்கவில்லை தோட்டத் தொழிலாளிகளின் நிலைமையை வெளி உலகிற்கு எடுத்துக்கூறி ஆதரவு தேடவில்லை.

அதுமட்டுமல்ல போராட்டங்களில் முன்னின்ற உதாரணமாக சிபேஸ்த், சட்டன் தொழிலாளிகளை கைவிட்டு விட்டனர். இன்று சர்க்காரால் ஏற்படுத்தப்பட்டுள்ள தொழில்கோர்ட் நிலைமையை பற்றியும் விளக்கவில்லை. தொழில் கோர்ட்டை முறியடிக்க முதலாளிகள் எடுக்கும் நடவடிக்கைகளுக்கு எதிராக தொழிலாளிகளை திரட்டவில்லை. சங்கத் தலைமை இதனால் தொழிலாளிகளிடத்தில் பிரிந்து நிற்கிறது. சென்னை சட்டசபைத் தேர்தலில் பல தொழிற்சங்க ஊழியர்கள் தலைமைக்கு எதிராக வேலை செய்தார்கள். அதனால் தலைமை அப்படிப்பட்ட ஊழியர்களை சங்கத்திலிருந்து வெளியேற்றியதுடன் நிர்வாகத்துடன் சேர்ந்து பழி வாங்கவும் முற்பட்டது. நிர்வாகத்தின் தயவால் சந்தா வசூலிக்கப்படுகிறது. அப்படியிருந்தும் சென்ற வருடம் 13 ஆயிரம் பேர்கள்தான் (76 ஆயிரத்தில்) சந்தா செலுத்தியுள்ளனர். சென்ற சென்னை சட்டசபை தேர்தலில் பெருவாரியான தொழிலாளிகள் சங்கத் தலைவருக்கு ஓட்டளிக்க மறுத்ததால் தோல்வி அடைந்தார். மேலும் சங்கத்திற்கு வசூலாகும் தொகையின் பெரும் பகுதி ஆபீஸர்கள், ஊழியர்களுக்காக 1951-52ல் 15 ஆயிரம், கார் செலவு சுற்றுப்பிரயாணம் என்று அதே வருடத்தில் 15 ஆயிரம் செலவு செய்யப்பட்டிருக்கிறது. ஆனல் தொழிலாளிகளுக்கு விஷயம் கற்றுக் கொடுக்க, பிரசாரத்திற்கென 1483 ரூபாய் மட்டும் செலவு செய்யப்பட்டுள்ளது.

இந்த சூழ்நிலைமையில் காங்கிரஸ் மீதும், தலைவர்கள் மீதும் குறைகள் தீராததால் அதிருப்தி அடைந்து தணித்து, தேங்கி நிற்கும் தொழிலாளிகளை ஜாதி அடிப்படையில் பிளவுபடுத்த முயற்சிக்கப்படுகிறது. இந்த நிலைமையில்தான் உண்மையான தொழிலாளிகளுக்காக போராடும் ஒரு தொழிற்சங்கம் ஆரம்பிக்கப்படுவது அவசியமெனக் கருதி கோட்டக் காடு தொழிலாளர் சங்கம் ஆரம்பிக்கப்பட்டுள்ளது. இந்த சங்கம் ஆரம்பமானவுடன், வெள்ளை முதலாளிகளும், காங்கிரஸ்சங்கத் தலைமையும், பரபரப்புடன் எதிர்வேலைகளை தொடங்கியுள்ளனர், குடியரசு சட்டப்படியும், நிர்வாகங்கள் தொழில்கோர்ட்டிற்கு கொடுத்துள்ள யாதாஸ்து (41 பாரா) கூறுகிறபடியும் எவருக்கும் சங்கம் சேர்க்கவும், சேரவும் உரிமையுண்டு. கம்யூனிஸ்ட் பூச்சாண்டியை ஆகஸ்ட் இறுதியில் நடந்த தோட்ட முதலாளிகள் மகாநாட்டில், ஸ்டேனஸ்ஸிளப் பின்னே அதையே சங்கத் தலைவர்களும் கிளப்புகிறார்கள், ஆனல் சமீப தேர்தல்கள் மூலம்—குறிப்பாக பார்லிமெண்ட் உபதேர்தலில்—விழிப்படைந்த யாரும் ஏமாறப் போவதில்லை. வால்பாறை, மேப்பாடி, திரு கொச்சி ஆகிய இடங்களில் தோட்டத் தொழிலாளிகள் செங்கொடியின் கீழ் திரள ஆரம்பித்துவிட்டார்கள். செங்கொடி பரவுவதை யாரும் தடுக்க முடியாது. ஐ. என். டி. யூ. சி. கூட காங்கிரஸ் தலைமையிலிருந்து விடுபட ஆரம்பித்துவிட்டது. எனவே இன்றைய சர்க்காரின் போக்கை தோட்டத் தொழிலாளர் சட்டத்தை நிறைவேற்றுமலிருப்பது, ராஜாராம் கமிட்டி சிபாரிசுபடி ஆள்குறைப்பிற்கு இடமிடுவது ஆகியவற்றை எதிர்த்துப் போராட முன்வந்தால் செங்கொடிக்காரர்கள் தனி சங்கம் வைக்காமல், ஒத்துழைக்கத் தயார். ஆனல் பிர்லாவால் ஆரம்பிக்கப்பட்ட ஐ. என். டி. யூ. சி, குறிப்பாக காங்கிரஸிலிருந்து தொழிலாளிகளை பிரிக்க தயாராக இல்லாத நீலகிரி தொ.ச. தலைமை அதற்கு இடமளிக்காது. எனவே உண்மையான உரிமைக்காக போராடும் செங்கொடி ஸ்தாபனத்தை அனைவரும் ஆதரிக்கவேண்டும் என தோழர்கள் கே. ரமணி, வெள்ளியங்கிரி, ராஜன், ப. வி. கிரி ஆகியோர் பேசினார்கள்.

# பொள்ளாச்சி தாலுக்கா விவசாய சங்க முதல் மகாநாடு

## சங்கத்தின் வேண்டுகோள்

பொள்ளாச்சி, நவ. 26—

பொள்ளாச்சி தலுக்காவின் நிலைமை நாளுக்குநாள் மிகவும் மோசமாகிக் கொண்டு வருகிறது. ஒரு சில பெரும் நிலப்பிரபுக்களின் கையில் தான் இன்றைய பொருளாதாரமே இருக்கிறது. அவர்களின் அடிமைகளாகத்தான் விவசாயிகள் காலந்தள்ள வேண்டிய நிலைமையும் உள்ளது- குத்தகைக்காரர், கூலி பண்ணையாள், சிறு நில விவசாயி, மத்யதர விவசாயி அனைவரும் இப்பொழுது பரவிவரும் பஞ்சத்தால் மிகவும் பாதிக்கப்பட்டுள்ளனர். இதை தீர்ப்பதற்கு என்ன செய்ய வேண்டுமென்று திட்டவட்டமாக முடிவு செய்தாக வேண்டும். அதற்குத் தேவையானது விவசாயிகளின் ஒன்றுபட்ட ஸ்தாபன பலம். எப்படி தஞ்சாவூர் ஜில்லா விவசாயிகளின் ஒன்றுபட்ட கட்டுப்பாடான சக்தியின் முன்னல் அரசாங்கம் பணிந்து தஞ்சை அவசர சட்டம் கொண்டுவர வேண்டிய நிலைமை ஏற்பட்டதோ, அதுபோல இங்குள்ள விவசாயிகள் ஒற்றுமைதான் இன்றுள்ள கஷ்டத்திற்கு பரிகாரம் காண முடியும். அதற்கான முன் முயற்சியில் தாலூக்கா விவசாய சங்கம் ஈடுபட்டுள்ளது. வரும் டிசம்பர் 7-12-52 தேதி அன்று பொள்ளாச்சியை அடுத்த சிங்காநல்லூரில் தாலுக்கா விவசாய சங்க முதல் மகாநாடு நடைபெறுகிறது. அதற்காக சங்கத்தின் முக்ய ஊழியர்களான எல் பழனிசாமி [illegible] வருவதற்காக எல்லா கிராமங்களுக்கும் சென்று கொண்டிருக்கின்றனர். பல கிராமங்களுக்கு வர முடியாமல் போகலாம் ஆகவே விவசாயிகள் தாங்களாகவே முன் வந்து மகாநாட்டை வெற்றிகரமாக நடத்த உதவுவதுடன் அவர்களுடைய பிரச்னைகளையும் மகாநாட்டில் வைத்து முடிவு காண ஆவன செய்ய வேண்டுமென்றும் விவசாய சங்கம் வேண்டிக் கொள்கிறது: மற்றும் சங்கத்தை பற்றிய விஷயத்தை தெரிந்துகொள்ள விருப்பமுடைய தோழர்கள் விவசாய சங்கம், 3 உடுமலைப்பேட்டை ரோடு பொள்ளாச்சி என்ற விலாசத்தில் வந்து தெரிந்து கொள்ளவும் என்று பொள்ளாச்சி தாலூகா விவசாயசங்க ஆபிஸ் செயலாளர் தோழர் ஏ. வி. தேவன் அறிவிக்கிறார்.

# விவசாய சங்கம் நிறுவப்பட்டது

கடத்தூர், நவ 22—

உடுமலைபேட்டை தாலுக்கா கடத்தூரில் 17-11-52ந் தேதி காலை 9 மணிக்கு கே.பி. ஷண்முகம் பிள்ளை தலைமையின் கீழ் நடைபெற்ற பொதுக்கூட்டத்தில் ஒரு விவசாயிகள் சங்கம் நிறுவப்பட்டது.

கே. வி. கவுண்டன் பூசாரி தலைவராகவும், கே. எஸ். சுப்பிரமணிய முத்துராஜா உபதலைவராகவும், கே. காளிமுத்து காரியதரிசியாகவும், ஜப்பார் உபகாரியதரிசியாகவும், சிவலிங்கம் பிள்ளை பொக்கிஷதாராகவும், பி. பேச்சிமுத்து கணக்கு பரிசோதகராகவும், உசேன் விளம்பர உறுப்பினராகவும் தேர்ந்தெடுக்கப் பட்டனர்.

# வாழி நீ கொரிய நாடே!

வாழி நீ கொரிய நாடே, வாழி நீ! வாழி வாழி!
ஆழிசூழ் உலகில், மக்கள் அரண்செயும் அறப்போ ராமேல்
ஏழிகு பிறவியேற்று, போர்க்கொடி ஏந்தி, மாற்றார்
சூழினும் வெல்லார் என்னும் உண்மையின் சொருப மானுய்!

விளைக்களம் நச்சும் யுத்த வேட்கையர் நினது நாட்டைத்
கொலைக்கள மாக்கிப் பன்னுள் கொடுமையே புரிந்த போதும்
உலைக்களத் துருக்காய், மக்கள் உறுதியே இறுதி வெற்றி
நிலைக்களம் காணும் உண்மை நெறியினை உணர்த்தி நின்ருய்!

சிந்தையில் இரக்கம் இல்லாச் சிறுமதி யாளர் நின்மேல்
செந்தழற் குழம்பின் குண்டு சிதறியே சிதைத்து மக்கள்
வெந்துடல் கருகிச் சாக வீழ்த்திய போதும் வீழாய்;
உந்திடும் தேச பக்தி உருவமாய்ப் பொலிந்து நின்ருய்!

சிங்கவெங் குருளை யொத்த வீரரைச் செருவில், கோஜே
வெங்கொடும் நரகில் வெட்டி வீழ்த்திய போதும், காதல்
மங்கையர் கற்பும் பொற்பும் மானமும் பறித்த போதும்
அங்குல நிலமும் மாற்ருன் வசப்பட அளிக்கி லாதாய்!

போர்ப்படை கொண்டும் குண்டு மழையெனப் பொழிந்தும், சேனை
வேர்ப்பட வீழத் தந்தும் வென்றிலா மாற்ருர் நின்னை
நேர்ப்பட பொருத லாற்ருர் கிருமிசேர் குண்டால் நின்னைத்
தூர்ப்பட அழிக்கும் எண்ணந் துணியினும் தோல்வி காணுய்!

நாசியர் இழைத்த நாசம் வெள்குற, நாணிக் குன்ற,
பாசிசக் கொடுமை பொய்யாய்ப் பழங்கதை போலப் போக,
நீசமே புரிந்தும் வீழாக் குன்றென நின்ருய்; எங்கள்
ஆசிய ஜோதி நீயே! ஆண்டுபல் வாழி வாழி!

"விலகு நீ அமெரிக் காவே!" என்றெழுந் தெழுந்து விம்மி
உலகெலாம் பரந்த மக்கள் குலமெலாம் ஒலிக்கும் ஒற்றைக்
குலவையால் சாந்திக் கொள்கை முழங்கியே நின்னைக் காப்போம்;
அலகுகண் டொதுங்கும் பேய்போல் போர்வெறி அழியக் காண்போம்!

சாந்தியின் இயக்கம், மக்கள் சக்தியின் இயக்கம், ரத்தம்
மாந்திடும் யுத்தப் பேயை மடிக்குமோர் இயக்க ஜோதி
ஏந்துவோம், எடுப்போம், வெற்றி எய்துமோர் உறுதி பூண்டோம்!
தீந்திரு கொரிய நாடே! நின்பழி தீர்த்து வைப்போம்!

ரகுநாதன்

